உ

சிவமயம்.

# தர்மபுரீஸ்வரர் கீர்த்தனங்களும் பதங்களும்.

இவற்றுள்

கீர்த்தனங்கள் ஆந்திரபாஷையில் தியாகையரவர்கள் முதலானோர்செய்திருக்கும் கீர்த்தனங்களின் வர்னமெட்டுகளிலும், பதங்கள் க்ஷேத்திரய்யரவர்களும், ஹிந்துஸ்தானி ஜாவளிகள் முதலானவைகளின் வர்னமெட்டுகளிலும்

இப்போது

சென்னை - இராஜதானி வித்தியாசாலையில்

வேர்ஹதலர்

சூப்பிரன்டென்டென்டாக இருக்கும்

கனம்பொருந்திய

ஜெயம். வேலுப்பிள்ளை அவர்கள்

மாணக்கர்

ஓவர்ஸியர்

ஆரணி. சி. முருகேசமுதலியார் அவர்களால்

இயற்றப்பட்டு,

சென்னை:

கலாரத்நாகரமென்னும் அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டன.

சுபானு சித்திரைமாதம்.



1883.

உ.

சிவமயம்.

# தர்மபுரீஸ்வரர்

## கீர்த்தனங்களும் பதங்களும்.

இவற்றுள்

கீர்த்தனங்கள் ஆந்திரபாஷையில் தியாகையரவர்கள் முதலானோர்செய்திருக்கும் கீர்த்தனங்களின் வர்னமெட்டுகளிலும், பதங்கள் க்ஷேத்திரய்யபதம், ஹிந்துஸ்தானி ஜாவளிகள் முதலானவைகளின் வர்னமெட்டுகளிலும்

இப்போது

சென்னை - இராஜதானி வித்தியாசாலையில்

வெர்னகுலர் சூப்பிரன்டென்டென்டாகஇருக்கும்

கனம்பொருந்திய

ஜெ. யம். வேலுப்பிள்ளை அவர்கள்

மாணாக்கர்

ஒவர்ஸியர்

ஆரணி. சி. முருகேசமுதலியார் அவர்களால்

இயற்றப்பட்டு,





சென்னை:

கலாரத்நாகரமென்னும் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன.

சுபானுஸு சித்திரைமாதம்.





1883.

உ

சிவமயம்.

# சிறப்புப்பாயிரங்கள்.

மஹாவித்துவானாகிய

புரசை - அஷ்டாவதானம்

## சபாபதிமுதலியார் அவர்கள்

இயற்றிய

### நேரிசையாசிரியப்பா.

துளக்கருபராரைச் சுவணப்பொருப்பின்
அளக்கருமவாசிக் கண்ணதாகிய
நாவலந்தீவி னன்னுபஃறேயத்
தேவருங்களிப்ப வாங்காங்கினிதுள
பன்மைசானட்டினுட் டொன்மைமிக்கதவ்
வைப்பினிலடியர்க்கு வெப்பொடுகுளிர்நோய்
தொடர்வுறுவண்ணங் கடவுட்பாசுரம்
பிரமபுரத்தின் வருசிவஞானக்
குரவர்பணித்தசெய் குன்றூர்முதலிய
பரவுறுமோரேழ் பதிகப்பதிகள்
ஒன்றொடொன்றணித்தாய்த் துன்றியெஞ்ஞான்றும்
வேட்டவையளிக்கு மாட்சியவாகி
வரநதியுடுத்த வாரணாசி
விரவியதொடக்கத்து மேவரநிலைஇய
சத்தபுரிகளுந் தமிலொன்றிதென்று
சித்திவேண்டினர்க்குச் சேய்மைத்தாக
நெடிதுளவாதலிற் படிமிசையவற்றினுஞ்
சீரியவென்னச் செப்புதற்கமைந்த

கூரியவண்புகழ்க் கொங்குநன்னாட்டிற்
சேரலமென்ற சேலத்தின்வட
சாரிறைகொள்ளுந் தருமபுரிக்கண்
திருக்கோவில்கொண்டுவீற் றிருக்குந்தனிமுதல்
உயிர்தொறும்விரவி யுடன்றெழிற்படுத்தி
யயர்விலாவுள்ளத் தமுதமூற்றுந்
திருவருட்பெருமான் மருமலர்த்தாளில்
ஆந்திரச்சொல்லி லமைதருகல்வி
வாய்ந்தகவிஞருண் மன்னுசோணாட்டில்
மேயதியாக ராயமாமறையோன்
பாடியவனந்த பதங்கீர்த்தனங்கள்
நீடியங்கங்கு நிகழ்வனவவைபோல்
தானும்பற்பல தானனியுன்னி
வானும்புவியு மகிழ்தலைசிறப்ப
நன்னுவலர்க ணயந்தசெந்தமிழில்
தன்னுலியன்ற தனியிகவாமே
வண்ணஞ்சந்த மடுக்குமேழிசைப்
பண்ணுமின்னன படிதவறுமைப்
பொருவருநெடுங்கந் தருவநூல்வகைமை
வல்லோர்வியந்து மதித்தனருவப்பக்
கனிந்துநெஞ்சகம் புனைந்தனனென்ப
கோகிலமதனைக் கூஉயிசைகாட்ட
நாகிளவண்டுபெண் ணவில்சுருதிகூட்டத்
தருமத்தொகுதி சுவைக்கனிவழங்கக்
கருவிப்பனிமுகின் முழவெனக்கறங்கக்
கேகயவிளங்குழீஇப் பாகனசொல்லியர்
போன்மெனநடிக்கும் பான்மைநோக்கி
நாகணவாய்ப் புணல்யாழ்கோப்ப
வாகுறுசெந்தார் வளப்பைங்கிள்ளைகள்
இவையிறும்பூதெனத் தவமகிழ்ந்தியாண்டும்
தம்மினத்தொருங்கு செம்மையிற்கிளக்குந்
தண்டலையரங்கம் விண்டொடநிவந்த
தாரணிசொலும்பெரி யாரணிநிலவும்
மணநிறைகுவளை மாலைமார்பினன்

கணபதிதவப்பயன் கண்டெனவுதித்த
விற்பனக்குரிசின் மேதக்கோர்குழாம்
பொற்புறப்பயிலும் புரவலனகலாப்
பத்திமைமாண்பு பணிவுநற்பண்புடன்
அத்தன்றிருவடிக் கன்பர்பானண்பன்
இந்நிலம்புகழ் முருகேச
னென்னுநாமத் திருக்குணத்தோனே.

---

மஹாவித்துவானுகிய
திரிசிரபுரம். மீனுட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் மாணுக்கரும்
சென்னைக் கவர்ன்மெண்டு நார்மல் பாடசாலைத்
தமிழ்த் தலைமைப்புலவருமாகிய
சோடசாவதாநம்

## தி. க. சுப்பராயசெட்டியார் அவர்கள்
இ ய ற் றி ய
அறுசீர்க்கழிநெடில் விருத்தங்கள்.

மெய்ம்மைநெறி திறம்பாத பெரும்புகழோ னைவருக்குண்
முன்னேன் குந்தி
பொய்ம்மையிலாத் தவப்பயனேர் வடிவெடுத்துப் புவிமிசையிற்
போந்த தென்ன
நொய்ம்மையிலாப் பேரறத்தோ னுழுவலன்பாற் பூசித்து
நுவ லரும்பே
றெய்துதற்கோ ரிடமாகி யெந்நலமும் பிறப்பதற்கோ
ரெல்லை யாகி. (க)

கருமநில வுலகினிலெந் நகரினிலுஞ் சிறந்தோங்கு
கதிர்ப்பு வாய்ந்த
தருமபுரி தனிலுறையுஞ் சிவபெருமான் றுணையடிக்கீழ்த்
தக்க பண்ணே
டருமைபெறு மிசைவாய்ந்த கீர்த்தனமா மலங்கலணி
பெறப் புனைந்து

பெருமைபெறச் சாத்தினனுற் பூதலத்து மீதலத்தும்
பிறங்குஞ் சீரான். (உ)

அன்னவன்யா ரெனிற்கேண்மோ பாலிநதி புடையுடுத்த
வருஞ் சிறப்பாற்
றுன்னுபுகழ்ப் பெரியவா ரணிவாழ்வோன் றுகளறுசீர்ப்
புலமை மிக்கோர்
மன்னுமுளங் களிகூரும் பெருங்கொடையோன் கணபதிமால்
வரத்தில் வந்த
நன்னயஞ்சேர் குணமுடையோன் பூதிசா தனமறவா
நன்மையாளன். (௩)

நதிகுலத்தோன் கற்றவர்பா னயப்புடையோன் கல்வியினி
னயக்குங் கேள்வி
வதியினின்முற்றியவுணர்வாற்சென்றெழுகும்வளமுடையோன்
மதிக்குஞ் சீர்சால்
நிதியுடையோ னளகேச னிகராக நிகரிலாச்
சீர்த்தி மிக்கோன்
கதிதருமெய்ச் சிவநேசன் முருகேச னெனும்வள்ளல்
கருத்தானன்றே. (ச)

---

மயிலை - அஷ்டாவதாநம்

சண்முகம்பிள்ளை அவர்கள்

இயற்றிய

நிலைமண்டில வாசிரியப்பா.

சொற்கிளர்நான்மறை தருவருஞ்சீர்சால்
பொற்பொதுமன்றிற் புலிமுனிபதஞ்சலி
யற்பொடுகாண விற்பனநடஞ்செய்
கற்பகக்கனியொரு விற்பொலிநுதலுமை
பங்குடையிறையவன் சங்கரன்சயம்பு
திங்களங்கண்ணியொடு கங்கையையிலங்க

சோதிவானவ னுதியம்பகவன்
வேதியர்மூவா யிரவர்நின்றேத்துறூஉம்
பால்கொள்வெண்ணீற் றன்பசுபதிபாமன்
நீல்கெழுகந்தர னித்திலங்கொழிக்கும்
பரவையுநாணுறூஉம் பரந்தகற்புடைப்
பரவைபாற்றூதெனப் பானுளேகப்
பண்ணியநாவற் பனவர்கோன்செந்தமிழ்ப்
பண்ணிசைகுலவிய பனுவற்கற்றைஞான்
றொருகராங்கான் முளையுமிழ்தரச்செய்த
திருப்பதியுடைத்தாய்த் திவளேழுலகுக்
கேழ்தலனைவ்யிற விலங்கியதெனநிலாம்
கொங்குநாட்டகத்திற் குலாவியத்தரும
தேவதைபூசனை யாற்றிடச்சிவனும்
காரினம்பொலிதரு மாவனப்புடைத்தாம்
தருமமெண்ணான்குந் தகைபெறவிலங்குறூஉந்
தருமபுரிக்குத் தாவரும்புகழ்மை
கிளர்பலகீர்த்தனம் கேடில்சீர்ப்பனவர்
குலாம்புதியெனநனி நிலாம்பெருந்தகைமைத்
தியாகராசத் திருவநீண்மறையோன்
தயாவினுந்திரந்தனிற் சாற்றியவர்ன
மெட்டிற்கீர்த்தனம் வியத்தகுகேத்திர
பதங்களின்வர்ன மெட்டிற்பதம்பல
ஜாவளிவிரவத் தண்டமிழ்வயங்குமித்
தேத்துஞ்சிறந்திட யாத்தனனென்ப
மந்தியுமறியா மரன்பயிலடுக்கத்து
நந்திமால்வரைவயி னுனிலஞ்செய்தவத்
தன்றுவான்சுரபி சுரந்தருளரும்பால்
இன்றும்யாறெனத் திகழ்ந்தினிதினிநேங்குறூஉம்
பாலியாறுடுத்த மேலவர்வதியும்
சிலமார்தொண்டைத் திருநாட்டகத்து
மங்கையர்வதன மதிதனைக்காணூஉ
இங்கிதன்சீர்த்தி யிவணனியிலங்கலின்
மறுவாமெனமதித் தம்மதிவானத்

துறைமதியாமென வுளுற்றிடல்போன்ம்
னின்றசீர்நிலவிய வென்றுறழ்சோதி
துன்றுமணிமாடஞ் சுலாம்பெரியாரணிப்
பதியினுள்குவளைப் பனிமலர்த்தண்டார்
மாலையாளெவரு மகிழ்குணமாலையான்
எத்திறத்தேத்து மிவன்புகழ்வெண்மையே
மொய்த்திவர்தலிற்புரை மொழிகூறிடவீண்
டில்லான்பொன்மகிழ்ந் துறைதருமில்லான்
வரநதியெனத்தல மலிசீர்கெழுமிய
சுரநதிகுலத்துத் தோன்றியதோன்றல்
கணபதியிருபதங் கனவினுமறவாக்
கணபதியெனும்பெயர்க் கவின்றருமறிஞனும்
மணியிவனொருநவ மணியெனல்புரையென
மணிலிவர்தருநம் மனோன்மணியம்மையும்
குயிற்றியதவமெலாங் கொண்டொருபடிவென
நயத்தகுவினோத னம்பனடியாரைச்
சிவமெனக்கருதும் சிந்தையானெஞ்சத்
தவமாசிலாத வருணெறிநாளுந்
தவநிலவுறமுரு கேசசற்குணனே.

சிறப்புப்பாயிரங்கள் முற்றிற்று.

---

உ

# சாத்துகவிகள்.

சென்னை இராசதானி வித்தியாசாலைத்
தமிழ்த் தலைமைப் பண்டிதராகிய

## கோ. இராசகோபாலபிள்ளை அவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

காரணிபூங் காப்புடைசூழ் கடிநகரொன் றறிஞர்நனி
கழறவோங்கும்
ஆரணிவாழ் கங்கைகுல முருகேசப் பெயரண்ண
லமரர்போற்றும்
சீரணிசேர் தருமபுரி சிறப்பவரு முக்கணுடைத்
தேவன்மீதா
நாரணிவான் செந்தமிழிற் கீர்த்தனங்க ணவின்றளித்தான்
ஞாலத்தோர்க்கே.

---

காஞ்சிபுரம் பிரபன்னவித்துவான்

## இராமசாமிநாயுடு அவர்கள்

இயற்றிய

கட்டளைக்கலித்துறை.

வாரணிபூண் மூலைமங்கை பங்காளன் மகிழ்ந்துறையும்
ஏரணிசீர்த் திகுலவுந் தருமபுரத் திறைக்கித்
தாரணி யேத்தவோர் கீர்த்தனமாமணித் தாரணிவித்
தாரணிமேவு முருகேசமாலின் றளித்தனனே.

---

சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ்
தமிழ்த் தலைமைப் பண்டிதராகிய
## திரு. சின்னசாமிபிள்ளை அவர்கள்
இயற்றிய
கட்டளைக்கலிப்பா.

மஞ்சுலாம்பொழில்சூழ் தருமாபுரி
மன்னுமம்பிகை பாகரிருகழற்
கஞ்சொன்மாலை புனைந்தருச்சித்தனன்
அளகைநேர்பெரி யாரணியென்னுஞ்சீர்
விஞ்சுதொல்பதியான் கங்கையொண்குல
மேன்மையாளன் கணபதியேந்தறன்
எஞ்சலில்தவக் காதலனென்றுல
கியாருமேத்து முருகேசவள்ளலே.

---

பேறை தசாவதானம்
## செகநாதப்பிள்ளை அவர்கள்
இயற்றிய
விருத்தம்.

வருகேச வன்பிரமன் றுதிதரும புரியீசன்
மலர்த்தாண் மீது
பெருகேச லறுஞ்சுகுணக் கணபதிவே ளியற்றுதவப்
பேற்றுன் வந்த
முருகேச மாலிசைத்த பதத்திலுள வின்னிசைய
முதத்தை மாந்தி
அருகேசத் தின்மாறுந் தளிர்த்ததெனி னிதன்பெருமை
யறைதற் பாற்றே.

---

திரிசிரபுரம் மஹாவித்துவான்
மீனாட்சி சுந்தரம்பிள்ளையவர்கள் மாணுக்கரு ளொருவராகிய
தில்லைவிடங்கன்
சு. வேலுசாமிபிள்ளை அவர்கள்
இயற்றிய
கலிவிருத்தம்.

ஒளிர்தரு சோழநாட்டி லுதித்துமை முலைப்பாலுண்டு
மிளிர்தரு பாண்டிநாட்டின் மீனவன் வெப்பநீத்துத் [தோன்
றுளிர்தருதொண்டைநாட்டிற் றுலங்கென்பை யணங்காச்செய்
குளிர்சுரம்போகப்பாடுங்கொங்குநன்னாட்டின்மாதோ. (க)

சந்திரமௌலிமேவித்தனிநகர்க்கொப்பாகாவென்
றிந்திரநகரைநோக்கியிளித்தல்செய்தலைநிகர்க்கு
மந்திரவரிசைமாவெண்மையுறவயங்குங்காட்சித்
தந்திரமறைகளார்க்குந்தருமமாபுரிக்கண்மேய. (உ)

பார்த்தனங்கடிக்கப்பட்டபரமன்மாமுடியிற்கங்கைத்
தீர்த்தனஞ்சுண்டகண்டத்திரிபுராந்தகன்மேலன்பிற்
பார்த்தனந்தனும்வியப்பப்பண்ணெழிலொழுகாநிற்குங்
கீர்த்தனமாஞ்சொன்மாலைகிளர்தரச்சூட்டினனல். (௩)

ஆரணியானைமாத்தேராளுடைத்தானைமேவும்
ஆரணியானைமேன்மையமர்கணபதிமான்மைந்தன்
ஆரணியானையூருமத்தர்தமத்தத்தாரும்
ஆரணியானையாதவருடனைச்சிறக்கப்பெற்றோன், (௪)

திருகேசலேத்தறன்னைச்சிந்தையிற்சமமாக்கொள்வோர்
அருகேசஞ்சரிக்குமேலோனயில்விழிமுகினேருங்கா
மருகேசமடவார்நாடுமதனரனடியார்நேயன்
முருகேசவேளென்றெங்குமொழிதருமிசைவல்லோனே (௫)

---

சென்னை-முத்தியாலுபேட்டை ஆங்கிலோ வர்னகுலர் ஸ்கூல்
தமிழ்ப்பண்டிதராகிய
பெ. கோவிந்தராஜகவிராயர் அவர்கள்
இயற்றிய
நேரிசையாசிரியப்பா.

திருவளர்பேரொளி யுருவளர்பித்திகை
மாளிகையும்பர் வாளிருங்கண்ணினர்

செங்கரந்தழீஇய கொங்கவிழலங்கல்
வள்ளியோர்தம்மை மாண்டகொடியதாய்க்
கள்ளுயிர்த்தலர்ந்த கற்பகத்தருவென
விண்ணோர்மாழாந் துண்ணுடினபெற
வனுகியிங்கித ரனுகியுணர்ந்த
வன்னோரளிக்குமுன்மின்னோரிடைநலார்
வெருண்டுதணத்தலுந் தெருண்டுநான்பெரியராந்
தருமபுரம்வாழ் பரமன்பசுபதி
யருளிடந்தைஇய புரள்பாம்பணிப்பிரா
னகமத்தடத்து மாகமுந்தொழுஞ்சிவ
ஞானபோத மானமலரிடை
முகுந்தன்விரிஞ்சனு மகஞ்சிறைவண்டர்க்
கெட்டுணையானுங் கிட்டாதம்மா
முந்தைநல்வினையா லைந்தெழுத்தோர்ந்து
பூதிசாதனம் போற்றுந்தொண்டரா
மேதமில்சுரும்பர்க் கெண்மைத்தாகி
யழியாவின்ப மொழியாதளிக்குந்
தண்ணருவனைய கண்ணுதற்பெருமான்
றுவிலருள்பொழி சேவடிசூட்டினன்
ஐந்தினிற்றன்மனத் தகத்தினூன்றிய
செந்தமிழ்ப்பைந்தரு செழித்துவளர்ந்து
பாராளைத்தாகி விராவியசினைவிடுத்
திளந்தளிரிடையிடை வளந்தலைசிறந்த
செழுமுகையரும்பிக் கெழுபோதாய்மலர்
கீர்த்தனமென்னுஞ் சீர்த்தியார்ந்த
மலர்மாலிகையைப் பலர்புகழ்வளஞ்சா
லாரணியாரணி யாரணியாரணிப்
பொன்னடிபுனைந்த சென்னியன்பெருந்தகை
வெள்ளைக்கிழத்தியும் வள்ளலர்ப்பேதையும்
வாழ்முருகேசவள்ள
லேழிருபுவிக்கு மிசையளித்தோனே.

---

அஷ்டாவதாநம்

## பூவை. கலியாணசுந்தரமுதலியார் அவர்கள்

இயற்றியவிருத்தம்.

மறைமணக்கு மந்தணர்கண் மகமணக்குந் தருமபுரி
மலியுந் தூய
பிறைமணக்குஞ் செஞ்சடிலன் பெயர்மணக்குஞ் செந்தமிழிற்
பிறங்க வேண்டி
யிறைமணக்குங் கீர்த்தனையோ டிசைமணக்கு மெழிற்பதங்க
ளினிது சொற்றான்
நறைமணக்கும் பூம்பொழிலா ரணிமணக்கு முருகேச
நாவ லோனே.

---

மலையம்பாக்கம் வித்துவான்

## செங்கல்வராயபிள்ளை அவர்கள்

இயற்றியவிருத்தம்.

பெருமைசெறிபரமசிவனடியரெல்லாம்
பிறங்கியசீர்தருமபுரியதனினூளும்
மருவுசிவபெருமானைச்சாமவேத
வளமெனக்கீர்த்தனைகளாற்றுதித்தான்மேலோர்
கருதியவாரணிநகரமிலகவாழுங்
கணபதிமாலரியதவந்தனிலுதித்து
முருகவிழ்செங்குவளையணிமருமச்சீர்சால்
முருகேசவள்ளலெனுமொழிவல்லோனே.

---

பரங்கிமலை வித்துவான்

## தி. சுப்பராயசெட்டியார் அவர்கள்

இயற்றியவிருத்தம்.

நீரோங்கு செஞ்சடிலர் நிகழ்தரும புரத்தண்ணல்
நிமல னூர்தம்
பேரோங்கு பண்ணிசையோ டருந்தமிழ்க்கீர்த்தனைப்பதங்கள்
பிரிய மோடு

காரோங்கு குலதிலக னாரணிவாழ் முருகேச
கவிஞன் மிக்குச்
சீரோங்கு முலகதனில் யாழ்தாங்கு முனியேங்கச்
செப்பி னனால்.

---

ம-௱-௱-ஸ்ரீ

செங்கற்பட்டு

## அரங்கசாமிநாயகர் அவர்களால்

இயற்றப்பட்ட

அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

வண்டானமதகளிற்றினிருரியான்றருமபுரி
வள்ளன்மீது
வண்டானமுதமுறழுநல்லிசைக்கிர்த்தனநயந்து
வகுத்திட்டானால்
வண்டானமெனப்பாளைதனைக்கண்டச்சுறுமீன
மலிதடத்து
வண்டானமலர்த்தேன்மாந்தாரணிவாழ்முருகேச
வள்ளியோனே.

---

சென்னைச் செயின்ட்மேரி செமினேரி என்னும்
வித்யாசாலைத் தமிழ்ப்புலமை

இராயபுரம்

## சின்னப்பாவுமுதலியார் இயற்றிய

அறுசீர்க்கழிநெடில் விருத்தம்.

மாதங்கச் சிலைச்சிலையான் றருமபுரி வாழியவார்
சடையான் சைல
மாதங்கச் சுந்தரன்மேல் வலாரிமுன நயந்தளித்த
வயங்கு மத்த
மாதங்கத் தினைவிவரு முருகனைய முருகேச
வள்ளல் பொற்பூ
மாதங்கப் புயன்பதங்க ளொடுபலகிர்த் தனம்விழைந்து
வழுத்தி னனால்.

---

உ

சிவமயம்.

# தர்மபுரீஸ்வரர் கீர்த்தனம்.

## விநாயகர்காப்பு.

வெண்பா.

தண்பொழில்சூழ் தர்மபுரிச் சங்கரன்மே லன்பினொடு
பண்ணிசையாய்க் கீர்த்தனங்கள் பாடுதற்கு—நண்ணிக்
கரியுரியைப் போர்த்த கறைமிடற்றோ னீன்ற
கரிமுகவன் பொற்கழலே காப்பு.

## தியாகையர் முதலானோர் கீர்த்தனைகளின் வர்ண மெட்டுகள்.

(தனவாரிதனமுலேதா-ధనవారిధనములేదా)

என்கிற கீர்த்தனையின் வர்ணமெட்டு.

இராகம் - பியாகிடை - ஆதிதாளம்.

பல்லவி.

சிவநாமரச மகிமை
செப்பவும்வச மாமோ என்னால்.

அநுபல்லவி.

அவனியைத்தாங்கும் ஆயிரநாவுடைய
ஆதிசேடனாலும் ஆகவில்லைஎன்றால் - (சிவ)

சரணங்கள்.

கடவுளேநீரெம்மைக் காத்திடுமெனத்தேவர்
கடலெழுந்தநஞ்சைக் கையினாலுண்டிரட்சித்த - (சிவ)

ஆடுமாடுமென்று அன்பர்வணங்கிடப்பொன்
அம்பலந்தனிலா நந்தநடம்புரிந்த - (சிவ)

தாமரையிலகும் தடம்பலசூழும்
தர்மபுரிவாழும் தத்துவனும்சதா - (சிவ)

(எந்தவேடுகொந்துராகவா - ఎంతవేడుకొందురాఘవా.)

என்கிறகீர்த்தனையின் வர்ணமெட்டு.

இராகம்-மனோரஞ்சனி-ஆதிதாளம்.

பல்லவி.

சந்திரசேகரா உன்னையே
நம்பினேனென்றனை ஆதரி - ஓம்.

அநுபல்லவி.

சொந்தமென்றுனைச் சிந்தித்தேனையா
பந்தமறுக்கவே பகருவாய்வழி-ஓம் - (சந்திர)

சரணம்.

அன்பர்நெஞ்சினில் அமருந்தேவனே
அகமகிழ்ந்தெனையாட்கொண்டருளுவாய்
தர்மபுரியெனும்பதியில்வாழ்தேவா
கர்மமகலவேகாட்டுவாய்வழி-ஓம் - (சந்திர)

---

(நிதிசாலசுகமா - నిధిచాలసుఖమా.)

இராகம்-கல்யாணி-சாபுதாளம்.

பல்லவி.

பாதசேவைதருவாய் - உன்றன்திருப்
பாதசேவைதருவாய் - பதவியையருளுநிதியே - (பாத)

அநுபல்லவி.

திதாம்பிரபஞ்சத்தில் சிறுமைபடமாட்டேன்
நாதாஉன்னடிமை நற்கதியடைய - (பாத)

சரணங்கள்.

உமையாள்மகிழ்ந்திடும் உத்தமனேயடியார்
தமையாதரிப்பது தகுதியன்றோஉனக்கு
இமைப்போதாகிலுமுனை இச்சையுடனினைந்து
சுமையாம்பாசபந்தங்கள் சுத்தமாயகன்றிட - (பாத)

மாதராசையில்சிக்கி மயங்கினேனிந்நாளாய்
பாதகங்களநேகம் பாவியான்செய்தேன்
சோதனையினிவேண்டாம் வேதனைபடமாட்டேன்
காதலாயடியேனைக் காத்திரட்சித்தருள - (பாத)

தவமுனிவர்கள்துதி தயாபரனே
பவக்கடலைத்தாண்ட பக்குவமருளாய்
அவனிவனானென்னும் அறியாமையைநீக்கி
புவனந்துதிதர்ம புரியமர்சங்கரா - (பாத)

---

(கீதார்த்தமுசங்கீதா - గీతార్థము సంగీతా.)

இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னமுன்றன்கிருபை ஏன்வரவில்லையோ
பன்னகாபரண பாவனா - சங்கரா.

அநுபல்லவி.

பன்னுமறைகள்பணிபாதாநின்மகிமை
இந்நிலத்தோராலேஇயம்பமுடியுமோ - (இன்)

சரணம்.

கன்மவினைகளால் காலனைமறந்து
நின்மலாஉன்னை நினைக்குமறிவிழந்து
துன்பக்கடலாழ்ந்தேன் வன்பவநோயாலே
தன்னிகர்வேறில்லாத் தர்மபுரீசனே - (இன்)

---

(க்ஷீரசாகரஸயனா - క్షీరసాగరశయనా.)

இராகம்-தேவகாந்தாரி-ஆதிதாளம்.

பல்லவி.

வேதநாயகவிமலா - என்னைக்
காதலாயளித்திடுமையா - தேவா.

அநுபல்லவி.

மாதவத்தோர்துதி பாதனேஅடியார்
தீதகற்றுங்கால காலனேதேவா - (வேத)

சரணங்கள்.

பாலனைக்கறிபண்ணினவனைபத்தி
யாலேநீகொண்டாடினாய்
சீலனாம்திருநாளைப்போவானுக்குஇஞ்
ஞாலமதிக்கநற்கதிதந்தாய்

ஓலநீர்வைகையாறடைப்பதற்கு
கூலியாய்வந்திக்குக்குறைதீர்க்கவந்து
தாலமதுதுதிதர்மபுரீசனே
தற்காத்தருளினையலவோ-தேவா - (வேத)

---

(கத்தன்னவாரிகெகத்து - కర్తన్నవారికికర్త.)

இராகம் - தோடி - ஆதிதாளம்.

பல்லவி.

சுத்தமனத்துட னுன்னை
பத்திசெய்ய அருள்புரி.

அநுபல்லவி.

வித்தகனேஇறைவா விமலாஉமாமஹேசா - (சுத்த)

சரணங்கள்.

கர்த்தனென்றுன்றனைக் கருத்தினிலேஎண்ணும்
அர்த்தமும்நானறியேன் அமரர்கள்ஏத்துந்தேவே - (சுத்த)

உண்பதுறங்குவதே உண்மைத்தவமென்று
எண்பதுஎன்றனக்கு ஏகும்விதமளித்து - (சுத்த)

சந்ததம்உன்னைமத்தை சொந்தமாய்ப்பூசிக்கும்
தந்திரங்களறிந்து தர்மபுரீசனே - (சுத்த)

---

(பக்திபிக்ஷமீயவே - భక్తిభిక్షమీయవే.)

இராகம் - சங்கராபரணம் - ரூபகதாளம்.

பல்லவி.

முத்தியளிக்கு நாதனே
மூலகாரண வேதனே.

அநுபல்லவி.

சத்தியுமையாள் தொழும்பாதனே
சதுர்வேதசித்தாந்த போதனே - (முத்தி)

சரணம்.

பத்திசெய்யிலன்றைக்குப் பதினறுவயதளித்துப்
பகடேறிவந்தகமனைப் பதைத்துவிழவுதைத்து
தவமதிலுயர்ந்ததர்ம புரியெனும்பதியில்விளங்கிடும்
சிவகாமவல்லிநேயா பவவினைகளைப்போக்காயா - (முத்தி)

(ப்ராணநாதபிரான ప్రాణనాథబిరాన.)

இராகம் - சூலினி - ஆதிதாளம்.

பல்லவி.

காமநாச - கடாட்சித்தாளுமே.

அநுபல்லவி.

சோமனைததரித்த சுந்தரனேதேவி
வாமத்திலமைய வைத்தநாயகாஓம் - (காம)

சரணங்கள்.

சீலராகும்நைமி சாரண்யமுனிவர்
கோலமாமறைக்கு மூலப்பொருள்காண
தோலமிட்டலறி யோடியுனையேத்த
ஆலகண்டனேநீ யருளினதைப்போல -- (காமநாச)

ஐயனேயென்பிறவி யறுத்தும்பர்போற்றும்
தூயசிவலோகத் தேயுறையும்போகம்
வையகம்புகழ வழங்குமென்றிறைஞ்ச
செய்யகாணுனாக்கு சித்தியளித்திட்ட - (காமநாச)

இந்திரநகரும் இதனழகைப்பார்த்து
பிந்தியேயொளிக்க பேசொணுவளமார்
பந்தமிகுதர்ம புரிதனிலிலகும்
தந்தியுரிபோர்த்த தற்பரனேஓம் - (காமநாச)

---

(பரலோகசாதனமே పరలోకసాధనమే.)

இராகம் - யமுனு - ஆதிதாளம.

பல்லவி.

கருணலயா - கதிதாருமையா.

அநுபல்லவி.

அருமையா இதுவுமுமக்கு
ஆதரித்தாண் டருளுவாய்ஓம் - (கருண)

சரணம்.

ஜனகாதிமுனியோர்களுனேனிதம்
மனமாதிகரணங்களினுலே
வினைதீரவேஅதி விநயத்துடன்தொழும்
புனல்சூழ்ந்திடுந்தர்ம புரியினில்வளர்ந்திடும் - (கருணு)

---

(நாதோபாஸனே నాదోపాసనే.)

இராகம் - பியாகடை - ஆதிதாளம்.

பல்லவி.

ஏதோசோதனே - சங்கரா
எந்நாளுமுமக் கெளியவனுகுமடிமைமீது.

அநுபல்லவி.

வேதாமுதல்பணி பாதாநின்னருளால்
வினைகளெல்லாமறுமென்றுல் சாஸ்திரம் - (ஏதோ)

சரணம்.

எந்நேரமும்பல விதசங்கடங்களால்
சின்னஞ்சிறியேன் சிறுமைப்படமுறையோ
அன்புடனளிக்க ஆருனேயல்லாமல்
பொன்மதில்சூழ்தர்ம புரியமர்பூரணு - (ஏதோ)

---

(ராமுனிசமானமெவரு రామనీసమానమెవరు.)

இராகம் - கரகரப்பிரியை - ரூபகதாளம்.

பல்லவி.

சாமிநீ பராமுகமேனே
சஞ்சலப்படுமென் மீது.

அநுபல்லவி.

காமாதுரந்தானுமென்று
கடைப்பட்டேனிப்புவியில் - (சாமிநீ)

சரணங்கள்.

சந்ததமும் உன்தன்புகழை
　　யெந்தனுவினல் பாடி
பந்தமகலும்வழி தேடிப்
　　பாலனையாள்பிறை சூடி - (சாமிநீ)

மக்களாசை மனைவியாசை
　　மாய்க்கும்வகை தெரியாமல்
துக்கசாகரத்தில் மூழ்கித்
　　துறைகாணுத கலமாகினேன் - (சாமிநீ)

பத்திமார்க்கத்தை யுணர்ந்து
　　பகலிரவுமதில் நடந்து
முத்தியளிக்குந் தர்மபுரி
　　மூர்த்தியே நானறியேன் - (சாமிநீ)

---

(எந்தோப்ரம்மானந்தமு ఎంతో బ్రహ్మానందము.)

இராகம் - பிலஹரி - ஆதிதாளம்.

பல்லவி.

உண்டோ உன்தாளுக்கிணை - உமாமஹேசா.

அநுபல்லவி.

தொண்டாகினுமொன்றால்
　　தூயவராகும்வானோர் - (உண்டோ)

சரணங்கள்.

பூதலந்தன்னில் புனிதராகவேண்டி
மாதவம்புரிந்தோர்க்கு மாயையழித்தவா - (உண்டோ)

ஆகமவேதபு ராணங்களேத்தும்
யோகனேஉமையாள் பாகனேபோகனே - (உண்டோ)

தாரணியோர்துதி தர்மபுரியாம்பதி
சீருடனமைந்த சிவசங்கரதேவா - (உண்டோ)

---

# தர்மபுரீஸ்வரர் கீர்த்தனம்.

(வினராதநாமனவி ವಿನರಾದನಾಮನವಿ.)

இராகம் - தேவகாந்தாரி - ஆதிதாளம்.

பல்லவி.

பரலோக பாக்யமேநீ
மறவாது தேடுமனமே.

அநுபல்லவி.

சரியாகாதெதுவு மீடு
பரிவுடனேஅதை நாடு - (பரலோக)

சரணங்கள்.

பாதகங்கள்மறந்து பக்திமார்க்கந்தொடர்ந்து
வேதவிதியறிந்து விடதரனைப்பணிந்து
(பரலோக)

சத்தியமிதேயென்று புத்தியினுலதையுணர்ந்து
நித்தியமாகுமந்த வஸ்துவின்வளந்தெரிந்து
(பரலோக)

சத்தபுரிகட்குமேலாம் தர்மபுரியென்னுநகரில்
உத்தமனய்விளங்கிடும் உருத்திரன்முள்சிரமணிந்து
(பரலோக)

---

(நீதயசேராம - నీదయచేరాను.

இராகம் - எதுகுலகாம்போதி - ஆதிதாளம்.

பல்லவி.

சுந்தரனே சோம
சுவர்க்கானந்த போக.

அநுபல்லவி.

வந்தென்னையாள
சொந்தமில்லையோதேவ - (சுந்த)

சரணம்.

கருணுகடாக்ஷி
காத்தென்னை ரக்ஷி
தருணமிதுவே
தருமபுரிக்கோவே. (சுந்த)

---

(நினுவினுசுகமுகான - నినువినాసుఖముగాన.)

இராகம் - தோடி - ஆதிதாளம்.

பல்லவி.

பார்வதி மனோகரனே
பக்தனையாள் தயாபரனே.

அநுபல்லவி.

கார்த்திகேயனை ஈன்ற
கருணாகர சம்போ - (பார்வதி)

சரணங்கள்.

பூமியில்நான்பிறந்தமுதலாய்
புத்தியின்றியலேகின்றேன்
காமியென்றுபேர்புனைந்தேன்
சாமியேஉனைத்தொழமறந்தேன் - (பார்வதி)

அனுதினமுமுனதுபுகழை
ஆவலாய்ப்பாடிஞானம்
எனுமார்க்கத்தையறிந்து
மேலாம்பதம்பெற - (பார்வதி)

அன்னைதந்தைகுருதெய்வம்
யாவும்நீயல்லாமல்வேறே
பின்னையொன்றுங்காண்கிலேனன்
கன்னல்சூழ்தர்மபுரிவாழ் - (பார்வதி)

---

(சுகியெவ்வரோ - సుఖియెవ్వరో.)

இராகம் - கன்னடா - ஆதிதாளம்.

பல்லவி.

வரந்தருவாய் வினோதிர.

அநுபல்லவி.

வரந்தருவாய் செங்கரந்தருவாய்
புரமெரிசெய்த புண்ணியரூபனே - (வரந்)

சரணம்.

முத்தியடைவதற்கு முதலாம்பொருளே
பத்திவழிகாட்டி பவவினைகளையோட்டி
நித்தியமாய்தர்ம புரியினில்விளங்கும்
சத்தியனேஉனைச் சதாதுதிப்பதற்கு - (வரந்)

(எந்துதாகினடே - ఎందుదాగినాడే.)

இராகம் - தோடி - ஆதிதாளம்.

பல்லவி.

என்னவர்மமோ சுவாமி - என்மீதுனக்
கென்னவர்மமோ சுவாமி.

அநுபல்லவி.

எந்நாளில் தயைவருமோ - என்மீதுனக் - (கென்ன)

சரணங்கள்.

மனமென்னும்பேயினல் மதியுமயங்கித்
தினமுமலைந்திடுந் தினனுனலும் - (என்ன)

கல்லிற்செய்தயானை கன்னலருந்தச்செய்து
கருதுமடியார்க்குக் கருணைபுரிந்ததேவே - (என்ன)

மன்னுந்தர்மபுரி மருவியதேசிகா
பின்னுமேழையேன்செய்த பிழைகளைப்பொறுக்காமல்
(என்ன)

---

(எந்தனினேவர்ணிந்து - ఎంతని నే వర్ణింతు.)

இராகம்-முகாரி-ரூபகதாளம்.

பல்லவி.

மந்திரமோ - உன்
தந்திரமதனைக்காணேன்.

அநுபல்லவி.

வேந்தனுயரசாண்டவர்
வீதியிலலைந்தழுவதும் - (மந்திர)

சரணங்கள்.

தனமதைப்படைத்தவனுக்கு
மனக்குறைபலவிதநோயாலே
கனமதாயசுகசரீரிக்குப்
பணமில்லாக்குறையெந்நாளும் - (மந்திர)

தருமகுணனும்சீலனவனைப்
பருவமின்றிமாயவைப்பதும்
பெருமையில்லாஉலோபிக்குப்
பூரணாயுள்அளிப்பதும் - (மந்திர)
பிள்ளையில்லையென்பவர்க்கதைத்
தள்ளியவரையேங்கவைப்பதும்
கிள்ளைசூழ்தர்மபுரிவாழ்
வெள்ளைமேனிவித்தகனே - (மந்திர)

---

(இங்நாள்ளுதயராகுன்ன - ఇన్నాళ్లుదయరాకున్న.)

இராகம் - கேதாரகவுளம் - ரூபகதாளம்.

பல்லவி.

எல்லாநின்செயலென்று எண்ணியிருக்கும்வழி
சொல்லாயென்மனச்சஞ்சலம் தீரமஹேசா.

அநுபல்லவி.

பல்லாயிரந்தரம் பரிந்துகேட்டுமுன்மனம்
கல்லாயிருக்கின்றதே உமாமஹேசா - (எல்லாம்)

சரணம்.

என்போல்மாபாவி இவ்வுலகத்தினில்
இருப்பாரோ நானறியேன் - இருந்தாலும்
உன்தாளாகிலும் நினைப்பார் - மறந்தாகிலும்
உன்தன்னுமம்சற்றே உச்சரித்திடுவார்
அந்தவிதமு மறியேன் - தர்மபுரீசா - (எல்லாம்)

---

(உபசாரமுஜேசேவா - ఉపచారము జేశేవా.)

இராகம் - பைரவி - ரூபகதாளம்.

பல்லவி.

அபராதி ஆனேனையா
அடிமைக்கிரங்கிக் காப்பாய்.

அநுபல்லவி.

உபகாரமல்லவோ அது
உலகந்துதிதர்மபுரீசா - (அபராதி)

சரணங்கள்.

மோகமெனும்மையலினல்
தாகங்கொண்டேதிரிந்து
ஆகமவிதிதுறந்து
அலைகின்றேன்இப்புவியில்
தேகநிலையல்லவெனும்
தேன்மொழிகளையெறிந்து
போகங்களைத்தருமுன்றன்
பொன்னடியைமறந்து - (அபராதி)

---

(தலசினவாருதன்யுடை - తలచినవారుధన్యులై.)

இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

கனவிலு முன்னே
கருதும்படிசெய் என்னே

அநுபல்லவி.

மனமென்னும்பேய் தன்னை
மாயச்செய்து முன்னே - (கன)

சரணங்கள்.

கங்கைமணாளாஎன்சங்கடந்தீர்ப்பாய்
திங்களையணிந்ததேசிகனேநீ - (கன)

நீலகண்டேசனே நீறணிந்தோனே
கோலமயிலேறும் குமாரனைப்பெற்றவா - (கன)

தர்மபுரிவாழும் தற்பரனேஎன்றன்
கர்மங்களைப்போக்கி காத்தருளுவதற்குக் - (கன)

---

(த்ரிலோகமதனனு - త్రిలోకమతను.)

இராகம்-பாசு-ஆதிதாளம்.

பல்லவி.

சிவதரிசனம்செய் பவர்க்கொரு நாளும்
சிந்தையில்லையென்றாகமம் சொல்லும்

அநுபல்லவி.

தவநிலையின்னதெனத்தேற்றிப்பவமெனும்
சாகரக்கரையேற்றும் - (சிவ)

சரணங்கள்.

மேதினியிற்பிறந்து மிஞ்சுங்கலியால்நொந்து
மீளாப்பிறவித்துன்பங்களையோட்டி
ஆதியாம்நாதன்றன்அருள்வழிதனைக்காட்டி
அளிக்குமுத்தியதனை - (சிவ)

பாதகங்களறுத்துவேதனைகளொழித்து
பசிநோய்களைநீக்கிப்பரமனடி
காதலாயெந்நாளுங்கருத்திலமையவைத்து
காட்சிதனையளிக்கும் - (சிவ)

உனைவிடேனென்று உறுதியாய்ப்பூசிக்கும்
உத்தமராத்தம்மூர் சேர்க்கும்
கனைகடல்சூழ்புவிதனில் தர்மபுரியெனுமூர்
அதனில் சதம்பெறும் - (சிவ)

---

(கருணிஞ்சுடமிதிசமய - కరుణించుటకిదిసమయ.)

இராகம் - அபுரூபம் - ரூபகதாளம்.

பல்லவி.

தருவாயெனக்குன்னிருதாண்மலரை
தாணிபுகழ்ந்திடும் தர்மபுரீசா.

அநுபல்லவி.

அறியேன்உன்பெருமை யபராதியானேன்
சிறியேனாகியஎன் சிந்தையில்வந்து - (தரு)

சரணம்.

கடிதினிற்காலங் கழிந்திடாமுன்னம்
கனிந்தாண்டருள்வாய் கருணையோடென்னை
வடிவுயர்மாது உமையாள்மகிழும்
கொடியேனுடைய கோவேநானுய்ய - (தரு)

இராகம் - யமுனாகல்யாணி - ரூபகதாளம்.

பல்லவி.

சிவகாமி பாகா - இச்
சிறுவனையாள் யோகா.

அநுபல்லவி.

தவநெறியருள்தியாகா
சதுர்மறைததிபோகா - (சிவ)

சரணங்கள்.

பவசாகரந்தனில்விழ்ந்து
பதைக்கிறேன்எடுப்பாரின்றி
அவமாகவேயலைந்து
அவதிப்படுகின்றேனன் - (சிவ)

சந்திரஜடாதரனேயென்
சிந்தையில்குடியிருப்பவனே
மந்திரமாம்உலகவாழ்க்கை
மறக்கவகையருளுமையா - (சிவ)

மக்கள்துயர்தீர்க்கப்பெற்ற
மாதாவுக்கல்லாமல்
அக்கரையார்க்குண்டுசொல்லாய்
தக்கோர்புகழ்தர்மபுரிவாழ் - (சிவ)

---

இராகம்-காம்போதி-ஆதிதாளம்.

பல்லவி.

இந்த ஏழைமீது இன்னங்கருணையில்லை
எப்படி நானுய்குவேன்.

அநுபல்லவி.

எந்தவுலகத்துக்கும் ஈசனுய்விளங்கும்
கந்தனைப்பெற்ற கடவுளேயுனக்கு - (இந்த)

சரணங்கள்.

அழலுருவாயன்று அருணகிரியினின்று
கழலணிபதத்தையும் திழலருள்சிரத்தையும்

காணவேமறையோனுங் கரியமாலுஞ்சென்று
நாணவேநின்றிடுஞ் சாமம்போற்றியநாதா - (இந்த)

நல்லாளைக்கொடுவென்று வல்லாளனிடஞ்சென்று
சொல்லொணுத்துயர்தந்து ஒல்லாமையாக்கியன்று
இல்லாளையவன்தர வெல்லாநின்செயலென்று
வில்லார்மன்னவனுக்கு விமலாசேயாயுதித்தாய் - (இந்த)

வெள்ளியங்கிரியை மெள்ளத்தனதாக்கக்
கள்ளனுந்தட்சகன் கருதிவேள்விசெய்ய
தள்ளியவனைச்சங்கரித்துத் துயர்தீர்த்த
வள்ளலேதர்மபுரி அமர்சிவவேந்தே - (இந்த)

---

இராகம்-அசாவேரி-ஆதிதாளம்.

பல்லவி.

சோதனைசெய்யாதே சுத்தமூடனையா
ஆதரிக்கவேண்டும் அம்பலவாணு.

அநுபல்லவி.

மாதவர்பணிந்திடும் மங்கைபங்காளனே
பாதகனென்றெனைப் பரதவிக்கவிட்டு
(சோதனை)

சரணங்கள்.

இவ்வுலகத்துள்ள எல்லாமானிடருக்கும்
அவ்வவர்வினைப்படி அமைத்தனைவரையும்
செவ்வையுடனளித்துச் சித்திபெறச்செய்யும்
கொவ்வையிதழுமை கோவேஎன்னைநீயின்னும்
(சோதனை)

போதுபோக்குவதல்லால் புண்ணியரூபனே
ஏதுமறிந்திலேன் ஏழையானநாயேன்
ஓதுமறையாகமம் ஒன்றுங்கண்டிலேனென்னை
பாதுகாப்பதுன்றன் பாரஞ்சொன்னேனினி
(சோதனை)

தாளங்கள்தவழ்ந்திடுந் தடவயல்சூழ்தர்ம
புரியெனும்பதிதனில் பொற்புடனேயிலகும்
கரிமுகனைப்பெற்ற காலகாலனேயென்மேற்
பரிவுடனேயிரங்கிப் பதந்தந்தாள்வதைவிட்டு
(சோதனை)

---

இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

வாரும்வாரும்சிவநாதா என்முன்.

அநுபல்லவி.

வாரும்வாரும்என்முன் வாரும்வாரும்என்முன் - (வாரும்)

சரணங்கள்.

வாரும்வாருமென்னைப் பாருங்கடைக்கண்ணினால்
ஆருமில்லாப்பாவி யாயலைகின்றேனன் - (வாரும்)

மரம்வைத்தவன்தண்ணீர் வார்ப்பானென்பதுபொய்யோ
வரந்தந்தாண்டிடுவாய் வினைதீர - (வாரும்)

அரியயன்துதிதர்ம புரிதனில்வளர்ந்திடும்
அம்பிகைநாதனே அமரர்கோனேயென்முன் - (வாரும்)

---

இராகம் - பியாகு - ஆதிதாளம்.

பல்லவி.

சித்தமிரங் காயா
சத்தியுமை நேயா.

அநுபல்லவி.

உத்தமனே யுன்னை
மெத்தவும் நம்பியும் - (சித்த)

சரணங்கள்.

பத்தியுடன்பாடிப் பணியவுநானறியேன்
முத்தியென்பதுணரும் புத்தியில்லாச்சிறியேன்
(சித்த)

வாசமலர்த்தாரா வரமருளுந்தீரா
நேசமுடனென்மேல் நீதயைபுரிந்திடச்
(சித்த)

சரிவேறிலாத்தர்ம புரியமர்சங்கரா
பரிவுடனேயென்னைப் பாதுகாத்தருள
(சித்த)

---

இராகம் - சஹானு - ஆதிதாளம்.

பல்லவி.

அடியேனைக்காப்பாய் அம்பிகைநேயா.

அநுபல்லவி.

படியுளோர்துதிதர்ம புரியிலருந்தூயா - (அடியே)

சரணங்கள்.

சூத்திரப்பாவைபோல் சுழல்கின்றேன்மாயையால்
நேத்திரங்களிருந்தும் நிமலாவுனைக்காண்கிலேன் - (அடி)

மண்ணாசைபெண்ணாசை மதிகேடாம்பொன்னாசை
எண்ணருநின்னருளால் ஏகச்செய்யும்படிக்கு - (அடி)

சாத்திரமறியேன் பாத்திரங்குறியேன்
தோத்திரததால்நின்பதம் தொழும்விதமுமறியேன் - (அடி)

---

இராகம் - அடாணு - ரூபகதாளம்.

பல்லவி.

எனையாளத்தடையேன் சொல்லுவாய்ஏழைபங்காளா
உனைவிடேனினி உம்பர்வணங்கும்பொற்ருளா.

அநுபல்லவி.

வினையாளனுமென்றனைக்கை
விட்டாற்பழிவருமுன்றனுக்கு - எனை

சரணங்கள்.

கற்றபெரியோர்தங்களையடுத்துக்
கசடனெனும்பேர்கட்டியே விடுத்து

முற்றுமறையாகமங்களைப்படித்து
முனிவரருளியமுதுநூல் தொகுத்து
நற்றவம்புரிந்துஉனதுபுகழை
நலமுடன்நிதம் குறித்து
பெற்றவரத்தினாற்பேதையானுய்யப்
பேருள்தன்னையே உகுத்து
(எனையாள)

இன்னமேன்வாதுஎளியவன்மீது
ஏற்காதிதுதகை மையா
சின்னவனென்றென்னைச்சிதறவடித்தால்
சீக்கிரம்உன்பேர்போ மையா
பன்னுமறைகளெல்லாமுன்றனைப்
பக்தரட்சகனென்பதுபொய் மையா
முன்னும்பின்னுஞ்சற்றுந்தெரியாதவனை
முழுதுஞ்சோதனைசெய்வதுவாய் மையா
(எனையாள)

பொற்குடந்தன்னிற்புனலைத் திரட்டும்
பூவையர்தம்மிருவிழிகளை
நற்கயல்கண்டுதெம்மினமென்று துள்ளும்
நன்மணச்சோலைசூழ்தடங்களைப்
பற்பலவாயெங்குமற்புதமாக்கொண்ட
பகருந்தர்மபுரீசா பவங்களை
எற்கண்டபனியைப்போலஅகன்றிட
ஏதமின்றிதந்துஉன்றன் பதங்களை
(எனையாள)

---

இராகம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

ஆதரிப்பதுன்றனுக் கழகல்லவோ
அமரர்கோனே எனை.

அநுபல்லவி.

ஆதரியாவிடில் ஆரைநொந்துருகுவேன்
பாதகமகன்றிடும் பக்குவமளித்தெனை - ஆதரி

சரணங்கள்.

பார்க்குள்ளேநான்படும் பாடுகளனைத்தையும்
தீர்க்கும்விதமருளித் தீனனைக்கைவிடாமல்
(ஆதரி)

இரவும்பகலுமென்னை யிடைவிடாமல்வாட்டியும்
பிறவித்துன்பங்களைப் பேசவொட்டாமலோட்டி
(ஆதரி)

தர்மபுரியமருந் தனிமுதலேநல்ல
தருணமிதுவேஇன்னும் தாமதமில்லாமல்
(ஆதரி)

---

இராகம் - தர்ப்பார் - ரூபகதாளம்.

பல்லவி.

அருள் புரிவாய்
அகமெலிந்த இவ்வடிமைக்கிரங்கி.

அநுபல்லவி.

அருள்புரிந்தென்னை யாட்கொள்ளவேண்டும்
திருவாழ்தருதர்ம புரிவளர்தேவனே - (அருள்)

சரணம்.

அடியார்திருக்கூட்டத் தமரும்படிசெய்து
மிடியால்வருந்தி மீளவகையில்லாக்
கொடியனுமெளியன் கோரும்வரந்தந்து
கடிமலர்த்தாரனே கங்கைமணாளனே - (அருள்)

பண்டுநான்செய்த பாதகம்போக்கிநின்
தொண்டுசெய்துஉன்னைத் தொழுதுகாலம்போக
விண்டுமுதலோர் வீழ்ந்தடிபோற்றிக்
கொண்டுவணங்கும் குருபரனேநீ - (அருள்)

குற்றம்யான்செய்தாலும் கோபம்நீவையாமல்
பெற்றவர்பிள்ளையைப் பேணுதல்போலச்
சற்றுமறிவிலாச் சாதகனைரட்சி
கொற்றவனேயெங்கள் கோமானேயின்று - (அருள்)

இராகம் - யமுனகல்யாணி - ரூபகதாளம்.

பல்லவி.

இந்தச்சேய்மேல் என்னகோபம்
ஈதென்னபரி தாபம்.

அநுபல்லவி.

முந்தத்தவத்தில் குறைகளையே
முழுதும்செய்திருந்தாலும் இன்னும் - இந்த

சரணம்.

சொந்தமென்று உன்னுடன்குறை
சொல்லிமுறையிடு கின்றேன்
எந்தையே நீகைவிட்டால்
ஏழையீடேறுவதெப்படி - இந்த

சுந்தரமூர்த்தி யேயுனக்கு
வந்தனமனந் தந்தந்தேன்
அந்தகனென்றனைக் கண்டால்
அஞ்சும்வழியரு ளாமல் - இந்த

தேசிகனே தேவனே
மாசிலாத மாமணியே
காசினிதுதி தர்மபுரி
கண்ணியனே கலையறியா. - இந்தச்

---

உ

சிவமயம்.

# தர்மபுரீஸ்வரர் பதங்கள்.

---

## க்ஷேத்திரய்யபதவர்ணமெட்டுகள்.

இராகம் - அசாவேரி - சுதிதாளம்.

பல்லவி.

துரையேஎன்மேற்கோபம் என்னத்துக்கட இன்னும்
கரையாதோஉன்மனங் கருங்கல்லோ.

அநுபல்லவி.

விரைசேர்மலர்த்தாரனே விண்ணவர்போற்றிடும்
திருவாழ்தர்மபுரியுறை சிவநாதனே - துரை

சரணங்கள்.

வருவாய்வருவாயென்று வழிபார்த்திருந்தேனான்
தெருவையலங்கரித்துத் தீபங்களுமேற்றினேன்
மருமலர்க்கணைகளால் மறைந்தொளித்திட்டேன்
பருவமென்னத்திற்குப் பாரில்பெண்களுக்கென்றேன் - (துரை)

பார்க்கும்பெண்களெல்லாம் பரிகாசஞ்செய்வாரோ
ஆர்க்குந்தெரியொணாது ஆசைநாயகன்கோபம்
வேர்க்குதுஎன்தேகம் வெந்நீராகுதுபன்னீர்
பார்க்குள்ஆடவர்மேலே பண்ணிவைத்தாரிச்சை - (துரை)

மீறுதேஎன்தனங்கள் மிக்கமயலேறிச்
சீறுதேயல்குலகம் சித்தசன்மந்திரத்தால்
வேறுஎனக்கார்துணை விரகநோயைத்தீர்க்கக்
கூறுமென்மேலாசை கொஞ்சமாகிலுமில்லையோ - (துரை)

---

இராகம் - பிலஹரி - ரூபகதாளம்.

பல்லவி.

கண்மணியேவாடா - என்னருகில்
கண்மணியேவாடா.

அநுபல்லவி.

கண்மணியே வாடா
கட்டிமுத்தந் தாடா - (கண்மணி)

சரணங்கள்.

சொல்லியழையாமுன் வந்துவெகுநாளாச்சே
தூங்கவிடாமற்செய்த சரசமெல்லாம்போச்சே
மல்லிகைப்பூச்செண்டாலே மாறிமாறிஎன்றன்
மார்பிலெறிந்தென்னை மருவியதும்போச்சே
(கண்மணி)

மருந்தெவளிட்டாளோ பாவி - என்னை
மறக்கவைத்தாளோ மூதேவி

இருந்திருந்தஉன்மேல் சோருதாளன்ஞவி
வருந்துமடியாள்தன் கருங்குழலைத்தாவி
(கண்மணி)

பருவம்விஞய்ப் போகுதே - என்றன்
பருத்ததனங்கள் விம்மித் தாவுதே
உருவிலியையெரித்துஉம்பர்துயர் மாய்ந்தே
திருவளருந்தர்மபுரியமர்சிவ வேந்தே.
(கண்மணி)

---

இராகம்-தன்னியாசி-ஆதிதாளம்.

பல்லவி.

இன்னம்வரக்காண்கிலேன் - என்துரைசாமி

அநுபல்லவி.

தன்னந்தனியேநான் தவிக்கிறேன்விரகத்தால்
முன்னம்என்தனைத்தொட்டு முத்தமிட்டுச்சேர-(இன்னம்)

சரணங்கள்.

மாதங்கள்மூன் ருச்சுதே - சொல்லிப்போன
நீதங்கள்பொய் யாச்சுதே
பாதகனுமதன் மோதுகிருன் சரத்தால்
காதல்மீறுதேமெய்சோருதே நானென்செய்வேனினி
(இன்னம்)

சந்திரவதனுள் மேலே - வைத்தமோகத்தால்
என்றனைமறந்த தாலே
தந்திரமாய்கைவிட்டால்எந்தவிதமெனக்கு
சிந்தனையால்மனம்வாடிதனமாடியதிர்ந்தும்
(இன்னம்)

கன்னல்மொழிப் பாக்கியே - என்றிருபத்தைப்
பின்சொல்லாமல் வாக்கியே
தென்னேருந்தர்மபுரி திகழுஞ்சிவநாதன்பாற்
கன்னியமொவருமே காணுமல்சேர்ப்பாய்
(இன்னம்)

---

இராகம் - தோடி - ரூபகதாளம்.

பல்லவி.

ஏனோ வுமக்கென்மீதிற் கோபம்
இனிதாளாது மோகம்.

அநுபல்லவி.

வானோர்பணி தருமபுரியில்
வாழுங்கங் காதரனே - (ஏனோ)

சரணங்கள்.

இத்தனைநாள் வரையிலுமென்தன்
இஷ்டப்படிக்குக் குலாவிசுகம்
மெத்தவுமேதந்து மேனிபுளகித்துச்
சித்தங்களிக்கவே சேர்ந்தணைந்திருந்தும் - (ஏனோ)

கந்தர்ப்பனுமுனைக் கண்டுமயங்கிட
காதலனேயென்முன் வந்து
கந்தகஸ்தூரி ஜவ்வாதுபூசியே
கலவிகளனந்தம் செய்தணைந்திருந்தும் - (ஏனோ)

மல்லிகைமுல்லை யிருவாட்சிசெண்பக
மாகுமலர்களைச் சூட்டி
மெல்லியேநானினி சகியேனென்றென்தன்
மேகலையைநீக்கி மேவிநீரணைந்தும் - (ஏனோ)

---

இராகம் - காம்போதி - ஆதிதாளம்.

பல்லவி.

மாதரசேயென்ன மதிமோசம்வந்ததடி
காதல்மீறுதென்னுசைக் கணவன்வரக்காணேன்.

அநுபல்லவி.

சேதியறியாயோநீ சீதமதியணிந்த
சோதியாம்சங்கரன் சூதுக்காரனடி - (மாதர)

சரணங்கள்.

வாரிட்டுவிம்மிப் புடைத்தவென்னிளங்கொங்கை
போரிட்டுமதன்கணை யோடேநானுற்று
தாரிட்டுக்கந்த கஸ்தூரிபுனுகிட்டு
ஏரிட்டென்மனநோக ஏந்திழையேயென்செய்வேன்(மாத)

நஞ்சாகுதுபாலன்னம் நற்கனிகள்கசந்து
கொஞ்சுங்கிளியோசை கோபமூட்டுதுகேட்டால்
பஞ்சணைமெத்தையில் படுத்தாலும்நித்திரை
அஞ்சுகமேகொஞ்ச மாகிலும்வரவில்லை - (மாதர)

உன்னைவிட்டாலெனக்கு உற்றதுணையார்சொல்லாய்
கன்னியேநீயென்தன் காட்சியைக்கண்டாயே
தன்மமேமிகுத்த தர்மபுரிவாழும்
பன்னகாபரணனை பார்த்தழைத்துவாபோடி - (மாதர)

---

இராகம் - ஆநந்தபைரவி - ஆதிதாளம்.

பல்லவி.

மாரா எனைவதைக்காதே உன்கணைக்கு
நேரா நான்காமி கொல்லாதே.

அநுபல்லவி.

போரேனென்னுட னின்னும் புத்தியாச்சுதேபின்னும்
வீராபெண்கள்மனச் சோரா சரணடைந்தேன் - (மாரா)

சரணங்கள்.

மின்னூர்படுமேதி துயரமுன்னுடன்ரதி
யெந்நாளிலுஞ்சொல்ல வில்லையோஇதுசதி
பின்னுமெனக்குக்கதி பேதையாமென்பதி
தன்னாலல்லோவுன்விதி முடியுங்கேளென்மதி - (மாரா)

உன்னுருவத்தையோர் உயர்படத்தில்வரைந்து
கன்னியொருத்தியைக் காட்டச்சொன்னேன்விரைந்து
அன்னையேயவனுக்குக் கணைமாத்திரமோவரைந்து
அநங்கனலவோஅவன்பேர் என்றுள்மனங்கரைந்து - (மாரா)

பெண்களில்பதுமினி யாச்சுதேநான்பாவி
மண்ணிற்பிறந்தேனென் ஞசைநாயகன்தேவி
விண்ணோர்துதிதர்ம புரியிலகுஞ்சாம்பவி
நண்பனுமவன்மேலே நாடுதேயென்னுவி - (மாரா)

---

இராகம் - சுருட்டி - ஆதிதாளம்.

பல்லவி.

என்னுயிர்ப்பாங்கியே மன்னன்வரக்காணேன்
இன்னமென் செய்வேனடி.

அநுபல்லவி.

முன்னமேதெரிந்தால்நான் முழுதும்மோசம்போகேன்
கன்னியர்க்குள்ளேநீ கைதேர்ந்தவளாச்சுதே - (என்)

சரணங்கள்.

மாலைப்போதானுல்பாவி மாரன்வதைப்பானென்று
சீலையிறுக்கிக்கட்டி சித்திரமெழுதினேன்
சேலையனைய விழியாளேயென்தன்
கோலநாயகனைப்போல் குவிந்ததந்தசித்திரம் - (என்னு)

கனவிலவனென்னிட கன்னங்களைசசுவைத்து
பின்னலையோர்கையால் பிடித்துமற்றோர்கையால்
கனகக்கிண்ணமொத்தவென் னிளந்தனத்தைப்பிடித்து
அநங்கனும்நாணவே அன்புடனணைந்தானே - (என்னு)

மடமயிலேயென்தன் மனதைநீயறியாயோ
தடமதில்சூழ்பெறும் தர்மபுரியில்வாழும்
விடமுண்டானையோடியென் வீட்டுக்கழைத்துவந்தால்
கடகமுன்கைகளுக்குக் கைம்மாருகப்போடுவேன்(என்னு)

---

இராகம் - செஞ்சுருட்டி - ரூபகதாளம்.

பல்லவி.

அரிவையே நானென்னசெய்வேன்
அன்பனைக்காணேன்.

அநுபல்லவி.

பிரியாமலிருந்தவனைப் பிரித்தவளெவளோ - (அரிவையே)

சரணங்கள்.

பாதகிநான்சகிப்ப தெப்படிபாங்கியேசொல்லாய்
காதல்மீறிக்கண்கள் சோருதுகபடநானறியேன் (அரிவையே)

தென்றல்வீசுதேயெந்தன் தேகமிளைக்குதே
நின்றுமேடைமேல்பார்க்கப் பார்க்கநிலவுமறையுதே (அரிவை)

நீலோற்பலக்கணையால் நித்தமெய்கிறுன்மதன்
மேலோர்துதிதர்மபுரி மேவுஞ்சங்கரனும் (அரிவையே)

---

## ஜாவளி வர்ண மெட்டுகள்.

(காமுனிவிரிசரமுலபாரிகி - కామునివిరిశరముల బారికి)

என்கிற ஜாவளியின் வர்ணமெட்டு.

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ஆதிதாளம்.

பல்லவி.

நாணிசகிக்க முடியாதடி - என்
சாமியையழைத்து வாடி.

அநுபல்லவி.

சாமியையழைத்து வாடி - மிகு
காமிநானல்ல வோடி - (நாணி)

சரணங்கள்.

ஏனின்னும்வாதுகள் என்னுடன்செய்கிறான்
மேனிகுலேக்கிறான் மதவேளிதுகண்டு
மீளவகை சொல்லாயடி - சகிநான்
மீளவகை சொல்லாயடி.
(நாணி)

வஞ்சியேஅவனோடோர்நாள் மிஞ்சியமோகத்தாலே
கொஞ்சியணையும்போது முந்தினேன்போகம்
வஞ்சனையிது தானடி - நான்செய்த
வஞ்சனையிது தானடி
(நாணி)

போதனைஎவள்செய்தாளோ பாதகிஎன்துரைக்குப்
பூதலம்புகழ்தர்மபுரிவாய்ந்திடுஞ்சிவ
நாதன்மேல்வைத்த காதல் - சிவ
நாதன்மேல்வைத்த காதல்
(நாணி)

---

(செலிமனகியாலவாணிதோ - చెలిమన గ్యాలవానితో)

இராகம்-ஹிந்துஸ்தான்காபி-ஆதிதாளம்.

பல்லவி.

சகிநமக்கேண்டியவனோடுநேசம் - போதுமே.

அநுபல்லவி.

அவன்நேசம் போதுமே
அவனிடநேசம் போதுமே - (சகிநம)

சரணங்கள்.

நிலவெரிக்குஞ்சோலையிலென்னைக்
குலவியணைந்தாளச் சொன்னேன்
குலவியணைந்தாளச்சொன்னால்
கலவிசெய்யேன்போடி யென்றான்
(சகிநம)

என்தன்மையல்தீரவோர்நாள்
வந்திதழைப் பருகச்சொன்னேன்
வந்திதழைப் பருகச்சொன்னால்
முந்தியெனைச் செய்யச்சொன்னான்
(சகிநம)

அத்தனவன் தர்மபுரி
வித்தகனும் கர்த்தனவன்
வித்தகனும் கர்த்தனவன்
விடையேறுஞ் சத்திபரன்
(சகிநம)

---

(எந்தோனேவினவிந்துனே - ఎంతో నేవసవంతునే.)

இராகம்-சங்கராபரணம்-ஹிந்துஸ்தான்காபி-ரூபகதாளம்.

பல்லவி.

சரியோநீசொல்லும் வார்த்தைகள்.

அநுபல்லவி.

என்துரைசாமி - (சரியோ)

சரணங்கள்.

சரியோநீசொல்லும்வார்த்தை
மரியாதையாகுமோ
பருவம்போன பெண்களானால்
பக்கத்திற்கணவரைத்தேடார் - (சரியோ)

நாயகனைப்பெண்பிரியும்
நற்சமயம்பார்த்திருந்தே
மாயவேடன்மலர்க்கணையால்
காயவிடுவானேஅப்போது - (சரியோ)

அரைக்கணமும்பிரிந்திலேனுன்
ஆசைநாயகாஉனைவிட்டு
வரைசூழும்தர்மபுரியில்
வாழும்அம்பிகைபாகா - (சரியோ)

---

(ஏமிசேதுஎடலசைது - ఏమిచేతు ఎటులసైతు.)

இராகம்-கமாஸ்-ஹிந்துஸ்தான்காபி-ரூபகதாளம்.

பல்லவி.

வாரும்சாமி வந்துஇன்பம்
தாருமென்மேல் தயைசெய்து.

அநுபல்லவி.

சீர்வளர் தர்மபுரிவாழ்
தியாகாயோகா உமைபாகா - (வாரும்)

சரணங்கள்.

விரகதாபமடைந்தவென்னை
விட்டுப்பிரியலாச்சே
பாதவிக்கும்பாவிமுகம்
பாராய்சற்றேகட்டிச்சேராய் - (வாரும்)

மாரன்தேர்மேலேறியவன்
மலர்க்கணையைமறுப்பாயே
சோரனவனென்னைத்தொட்டான்
தீரனுனல்போர்புரியும் - (வாரும்)

இனிபொறுக்கமாட்டேனையோ
இத்தனைநான்சொன்னால்பொய்யோ
தனிவழியில்விட்டவென்னைத்
தாவுறுன்மதனுன்னபயம் - (வாரும்)

---

(கெடிகெடியகுசலமா - ఘడిఘడియకుశలమా.)

இராகம்-கமாஸ்-சாபுதாளம்.

பல்லவி.

மரியாதையுனக்கிதுவோ - (சாமி)

அநுபல்லவி.

சாமி சாமி சாமி சாமி - (மரி)

சரணங்கள்.

சரியாகாதுனக்கிந்த சரசமில்லாக்கலவி
தருமோமதுரம் தையலாமெனக்கு - (மரி)

எவளையுஞ்சிந்தையி லெண்ணிப்பாராதே
கவலையேனுனக்கு கட்டழகிகானலவோ - (மரி)

வந்தனங்களுனக்கு வஞ்சனைசெய்யாதே
தந்திரம்வேண்டாம் தர்மபுரீசா - (மரி)

---

(சாமிராடேமந்தனே - సామిరాడేమందునే.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - பியாகு - ஆதிதாளம்.

பல்லவி.

சாமிநானேதுசெய்வேன்
சரியோவராவிட்டால்.

அநுபல்லவி.

குறையேதுநான் செய்தாலுமென்ன
சரியோவராவிட்டால் - (சாமி)

சரணங்கள்.

சந்திரனும்வெந்தணலாய்த்
தாவி யெரிக்கிறான் - மதன்
கூவி யழைக்கிறான் - (சாமி)

மாரனம்பாலென்தனங்கள்
மீறிப் பதைக்குதே - நெஞ்சம
மாறித் துடிக்குதே - (சாமி)

சுந்தரிநானல்லவோஎனை
வந்து சேருமே - லீலா
இன்பந் தாருமே - (சாமி)

தர்மபுரிவாழுஞ் சிவாநந்தபோகனே - தவ
மங்கை பாகனே - (சாமி)

---

(வானியெடபாஸினே - వానియెడఁబాసినే.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ஆதிதாளம்.

பல்லவி.

போனநாதனைக்காணேன் பாவிநானென்செய்வேன்.

அநுபல்லவி.

நானவனைக்கூடிநாளாச்சுதேசகி - (போன)

சரணங்கள்.

மாமலர்க்கணையாலே மாரனெய்கிறுன்தனத்தில்
காமமீறவேயென்றன் கருத்தழிக்கின்றுனவன்
(போன)

கனவிலுமவனென்னைக் கைவிடமாட்டானே
மனந்துணியும்படி மாதெவள்செய்தாளோ
(போன)

தர்மமாகுமோஅந்தத் தர்மபுரீசனுக்கு
பர்வதராஜன்மகள் பக்கத்தில்சேர்ந்ததால்
(போன)

---

(சாலுதடவாயசகியா - చాలుతడవాయసఖియా)

இராகம் - கமாஸ்ஹிந்துஸ்தான்காபி - ரூபகதாளம்.

பல்லவி.

வாடைவீசுதடி வருகிறுனென்னுசைநாயகன்.

அநுபல்லவி.

ஆடையலங்கரிப்பேன் அணிவேன்ரத்னுபரணம்-(வாடை)

சரணங்கள்.

மேடைமேலே யிருப்பேன் - வரும்
ஜாடையிலே சிரிப்பேன்
கூடுஞ்சமயங் கண்டு
குதிப்பேனாநந்தங் கொண்டு
கூடமனமில்லையென்றால்
பாடுவேன்நயராகங்களை (வாடை)

பாலுந்தேனுஞ் சேர்த்து
பளிங்குக்கிண்ணியில் வார்த்து
தாகந்தீர்த்துஎன்றன்
மோகந்தீரடா வென்பேன்
மோகந்தீர்க்கவில்லையென்றால்
தேகம்விலையா தென்பேன் (வாடை)

கர்மவினையைப் போக்குந்
தர்மபுரிவிற் றிருக்கும்
சின்மயாநந்த போகன்
சிவகாமியம்மை பாகன்
நம்மையாதரிக்கு மீசன்
செம்மையுடன் பவனிவரும் (வாடை)

---

(ஓமதனுசெருவேதனு - ఓమదనా చెలువేదనా.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ஆதிதாளம்.

பல்லவி.

ஓதுனாயே சரியல்லவே - எனைவிட.

அநுபல்லவி.

ஓதுனாயேஓ ஓதுனாயே
ஓதுனாயே சரியல்லவே - எனைவிட
(ஓதுனாயே)

சரணங்கள்.

சோதனைசெய்தாலென் காதல்தணியுமோ
வேதனை தீருமோ

பாதகிஎன்துயரம் தீராய்
கட்டிச் சேராய்
சரியல்லவே எனைவிட (ஓதுவாயே)

பாங்கியருடன்சொல்லிப் பலதரமழைத்தும் - நான்
படுவதைக் குறித்தும்
ஏங்கியஎன்னருகில் வாடா
முத்தம் தாடா
சரியல்லவே எனைவிட (ஓதுவாயே)

பார்புகழ்தர்மபுரிபதியுறை அரனே
நற்கதியருள் பரனே
ஏர்பெறுமெங்கள்குல குருவே
சிவ உருவே
சரியல்லவேஎனைவிட (ஓதுவாயே)

---

(சாமிவேளகாதுரா - సామివేళగాదురా.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ஆதிதாளம்.

பல்லவி.

சாமிஜாலமேனடா - என்.

அநுபல்லவி.

சாமிஜாலமேனடா - என்சாமிஜாலமேனடா -(சாமி)

சரணங்கள்.

சோதனைநீசெய்யாதே யடா
பாதகமுனக்குண்டா மடா - (சாமி)

பார்த்தவிழிபூத்துப் போகுதே
சேர்ந்தணைய நேரமாகுதே - (சாமி)

தர்மபுரிவாழுஞ் சங்கரா
வர்மமென்மேல்சரி யல்லடா - (சாமி)

---

(கோரினகலிகியெட்ளாதிரா - కోరినకలికియెట్లాదిరా.)

இராகம்-ஹிந்துஸ்தான்காபி-சங்கராபரணம்-ரூபகதாளம்.

பல்லவி.

பண்ணினசரசம் என்னசொல்வேன்

அநுபல்லவி.

என் பிராணநாதன் - (பண்ணின)

சரணங்கள்.

அன்புடனேஎனைச் செண்பகமாலையால்
இன்பமதாகவே பின்புறமாய்க்கட்டி - (பண்ணின)

கொங்கைகள்மீதினில் சந்தனக்கோலத்தால்
செங்கரலீலையை சிங்காரமாகப் - (பண்ணின)

வட்டமிட்டமதன் பட்டணத்தினிலே
மட்டில்சுகவெள்ளம் எட்டியேபாய - (பண்ணின)

தர்மபுரியமர் இன்பசுகாநந்த
பர்வதராஜதவ புத்ரிபங்கனவன் - (பண்ணின)

---

(சாலேசாலேயலவாணி చాలెచాలెయలవాని.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ரூபகதாளம்.

பல்லவி.

போதும்போதும் புண்ணியவான்நேசம்

அநுபல்லவி.

போதும்போதும் புத்தியாச்சுதினி (போதும்)

சரணங்கள்.

விடியும்வரையில் வீண்பேச்சுகள்பேசி
விரகந்தீர்க்காமல் விட்டனன்சகியே (போதும்)

காதல்மீறுதென்று கண்சாடைகாட்டியும்
சோதனைசெய்கிருன் சூதுக்காரனவன் (போதும்)

புவிபுகழுந்தர்ம புரியிலமர்ந்திடும்
புரமெரிசெய்த புருஷரத்தினமவன் (போதும்)

---

(மரபுராதேசெலி - మరపురాదేచెలి.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ஆதிதாளம்.

பல்லவி.

வரவோ சாமிசொல்லாய்

அநுபல்லவி.

வந்துஎன்றன் சிந்தைமகிழ — (வர)

சரணங்கள்.

கொங்கையிரண்டையுமுன்செங்கையிலேதந்து
தங்கியுன்மடிமேல்தழுவியணைய - (வரவோ)

பஞ்சணைமெத்தையில் ரஞ்சிதமாய்ப்போகம்
மிஞ்சியேயுனைநான் கொஞ்சியணைய - (வரவோ)

பூமிபுகழுந்தர்மபுரியமர்சங்கரா
காமிநானுன்கருணையால்மீள - (வரவோ)

---

(கானிராகானிரா - కానిరాకానిరా.)

இராகம்-காபி-ஆதிதாளம்.

பல்லவி.

சேரடா சேரடா

அநுபல்லவி.

சேரடா சாமிஎனைச்சேரடா - (சேரடா)

சரணங்கள்.

மாலையைமலர்மாலையைமாலையை
மாலையைத்தரித்தென்னைமருவிமுத்தமிட்டுக்கட்டிச்
(சேரடா)

உருகுதுநெஞ்சமுருகுதுஉருகுது
உருகுதுகாமவெள்ளம் பெருகுதுசின்னமென்செய்வேன்
(சேரடா)

புரியினில்தர்மபுரியினில்புரியினில்
புரியினில்வளருஞ்சந்திரசேகராவுனைவிடேனெனைச்
(சேரடா)

---

(ரம்மனவேசாமினி - రమ్మనవే సామిని.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ஆதிதாளம்.

பல்லவி.

இவ்வளவுநேரமோ - இவ்வளவுநேரமோ.

அநுபல்லவி.

என்னையிருக்கச்சொல்லி வருவேனென்றுபோனவர் - (இவ்வளவு)

சரணங்கள்.

பாவிஎவள்கையில் சிக்கி - எனைப்
பதைக்கவிட்டவள்தன் பாதத்தில்கிடந்ததால் - (இவ்வளவு)

பங்குக்காரிஎங் கிருந்தாள் - அவள்
பொங்குகுலைந்துபோகாதோ ஆனாலும் - (இவ்வளவு)

தர்மபுரிவாழுங் கங்காதரனே - என்னிட
அங்கம்பரவச மாகுது - (இவ்வளவு)

---

(எடுபல்கெனோதெல்பவே - ఎటుబల్కెనో దెల్పవే.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ரூபகதாளம்.

பல்லவி.

என்னச்சொன்னான் சொல்லடி - அவன்.

அநுபல்லவி.

என்னச்சொன்னான் சொல்லடி
பாதகிசகிக்கமுடியா - (தென்ன)

சரணங்கள்.

அன்னமேயென்றன் பெயரைக்கேட்டதும்
ஆவல்கொண்டனனு ஆவல்கொண் டனனு
ஆவல்கொண்டு உன்னைத் தாவியழைத் தனனு
(என்ன)

தையலே நீ காட்டியமோதிரத்தை
கையில்வாங்கினனு கையில்வாங் கினனு
கையில்வாங்கியவன் கண்ணிலொத் தினனு
(என்ன)

தர்மபுரியில்வாழுஞ் சங்கரன்
வருவேனென்றனனு வருவேனென் றனனு
வருவேனென்றெனக்கு வாக்களித் தனனு
(என்ன)

(சையாடகதிதஙினதிரா - సైయాటకదిత్గినదిరా.)

இராகம்-சுருட்டி-ஆதிதாளம்.

பல்லவி.

கையால்சைகைகாட்டினுல் சரியோ - எனைக்

அநுபல்லவி.

கட்டிமுத்தமிடடா துரையேஉன்றன் - (கையால்)

சரணங்கள்.

தங்கமென்பேரடா அங்கம் சோருதடா
கொங்கையைவந்து சேரடா - என்
மங்கைப்பருவம் போகுதடா
(கையால்)

தர்மபுரிவாழ்கங்கா தரனே - என்விரகத்தைத்
தணிக்கவகையைமுன்னே சொல்லாய் - மதன்
கணைகள்விடுவதைநீ வெல்லாய் - இன்னும்
(கையால்)

---

(ராரராராசாமிநின்னு - రారరారాసామినిన్ను.)

இராகம் - ஹிந்துஸ்தான்காபி - ஆதிதாளம்.

பல்லவி.

வாரும்வாரும் சாமியென்முன்
வந்தோர்முத்தந் தாருமே.

அநுபல்லவி.

ஆருமில்லாச்சமயமிது மாரன்கணைபொல்லாது - (வாரும்)

சரணங்கள்.

எந்தனிளங்கொங்கைகளும் முந்தியெனையேறிட்டு
சந்ததமும்உன்வரவை சுந்தரனேபார்க்கின்றதே
(வாரும்)

எந்நேரமும்உன்னழகை யெண்ணியெண்ணிவாடுகின்றேன்
சொன்னசொல்லைமறந்தாயோ மன்னவனேயான் சகியேன்
(வாரும்)

கோடிவந்தனமுனக்குக் குறையின்றியான்செய்கின்றேன்
கூடியெந்தன்மோகந்தீர்க்க விடருள்தர்மபுரீசா
(வாரும்)

---

மங்களம்.

இராகம் - சௌராஷ்டிரம் - ஆதிதாளம்.

பாதாரவிந்தமலர்க்கு மங்களம் சுபமங்களம்.

திங்களைச்சடையில்வைத்த திவ்வியமுகநாயகன்தன் (பாதார)
மானையிடமேந்திய மறைமுதல்வோன்திருப் (பாதார)
சத்தியுமையாள்மகிழுஞ் சதாசிவனாரும் (பாதார).
ஐங்கரனார்தம்மைப்பெற்ற சங்கரனார்தம்மிருபொற் (பாதார)
அன்பன்முருகேசன்துதி ஆறணிஜடாதரர்தம் (பாதார)
தரணியோர்புகழ்ந்தேத்துந் தர்மபுரீசனார்தம் (பாதார)

முற்றிற்று.

---

மெய்கண்டதேவன் திருவடிவாழ்க.

---

சிவமயம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 4 | 29 | செய்யிலன்றைக்கு | செய்பாலன்றனக்கு. |
| 5 | 26 | வினைதீர | என்வினைதீர. |
| 9 | 12 | கருத்திலமைய | கருத்தினிலமைய. |
| ,, | 30 | கொடியேனுடைய | கொடியேறுடைய. |
| 11 | 3 | நின்றிடுஞ்சாமம் | நின்றிருநாமம். |
| 14 | 23 | பகருந் | பகராருச். |
| 15 | 6 | வாட்டியும் | வாட்டும். |
| 16 | 25 | சூதிதாளம் | ஆதிதாளம். |
| 17 | 13 | வைத்தாரிச்சை | வைத்நதாரிச்சை. |
| 19 | 30 | தாவுருன் | தாவுகிருன். |
| 27 | 26 | சின்னமென் | இன்னமென். |



